28th January 1961]

### *Mettur Reservoir*

* 213 Q.—SRI R. SRINIVASA IYER: Will the Hon. the Minister for Works be pleased to state whether the Government propose to depute Engineers to inspect the entire length of Cauvery and its tributaries to find out and report to Government the present state of these and how far their free flow have been obstructed and their impact on the irrigation source of this State, viz., the Mettur Reservoir?

THE HON. SRI P. KAKKAN: No, Sir.

**SRI R. SRINIVASA IYER:** ஏற்கெனவே இந்த மேட்டூர் ரிசெர்வாயருக்கு வரக்கூடிய தண்ணீரைப்பற்றி ஏற்பட்ட ஒப்பந்தம் சம்பந்தமாக, மைசூர் சர்க்கார் பாதகமாக நடந்து கொண்டு வருகிறார்கள் என்று சபையில் அறிவிக்கப்பட்டது. எவ்வளவு தூரம் காவேரி நதிக்கு வரக்கூடிய தண்ணீரை அவர்கள் தடுத்து வருகிறார்கள் என்பதைத் தெரிந்துகொள்வதற்கு, இங்கிருந்து என்ஜினியர்களை அனுப்பாவிட்டாலும், ஏதாவது பரிசீலனை செய்யப்பட்டு வருகிறதா, எந்தெந்த அணைகள் கட்டப் பட்டிருக்கின்றன என்று தெரிவிக்க முடியுமா? காவேரி நதிக்கு வரும் தண்ணீர் எவ்வளவு தூரம் தடை செய்யப்பட்டிருக்கிறது என்பதை, என்ஜினியர்களை அனுப்பித் தெரிந்துக்கொள்ளா விட்டாலும், வேறு வகையில் தெரிந்துகொள்வதற்கு வழிவகை செய்யப்பட்டு வருகிறதா?

**THE HON. SRI P. KAKKAN:** ஏற்கெனவே இப்பேற்பட்ட கேள்விகளுக்கு நான் பதில் சொல்லியிருக்கிறேன். கனம் நிதி அமைச்சர் அவர்களும், இப்பேர்ப்பட்ட கேள்விகள் பொது மக்களுக்கு நல்ல பயனை அளிக்காது, நன்மையைத் தராது என்ற கருத்தைத் தெரிவித்திருக்கிறார்கள். ஆகவே இரண்டு அரசாங்கங் களும் எவ்வளவு சுமுகமாக இதைப் பரிசீலனை செய்து முடிவு செய்ய முடியுமோ, அதை எல்லாம் செய்துகொண்டு வருகிறார்கள். இப்படிப்பட்ட கேள்விகள் போடுவதினால் நமக்கு நன்மை பயக்காது என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI R. SRINIVASA IYER: The Tamil translation of the question does not seem to be correct. I bring it to the notice of the Hon. Speaker.

### *Treasury for Vedaranyam*

*** 215 Q.—SRI A. VEDARATHNAM:** கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வேதாரண்யம் சப்-தாலூகாவில் ஏற்படுத்த உத்தேசித் திருந்த கஜானா (Treasury) எப்போது திறுவப்படும்?

(இ) அது இல்லையானால் அங்கு ஒரு ஸ்டேட் பாங்காவது திறுவப்படுமா?